கடைய நல்லூர் - க்ருஷ்ண புரம்

# வயற்காட்டு ஆஞ்ஜநேயர் அருட்புகழ்



அருட்கவி - தவத்திரு

**ஸாது ராம் ஸ்வாமிகள்** அவர்களால்

ஆசு கவியாக அருளப்பெற்றது.

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

நெல்லை மாவட்டம்

கடைய நல்லூர் – க்ருஷ்ணு புரம்

# வயற்காட்டு ஆஞ்ஜநேயர் அருட்புகழ்



[2 - 12 - 1992 இல், ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ்
ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சிஷ்யர்,
சென்னை-61, நங்கை நல்லூர்ப் பொங்கி மடாலய அதிபர்,
'திருத்தொண்டர் மாமணி', 'திருப்புகழ்ச் சதுரர்',
அருட்கவி—தவத்திரு
**ஸாது ராம் ஸ்வாமிகள்** அவர்களால்
ஷை ஹநுமான் ஸந்நிதியில் ஆசு கவியாக அருளப் பெற்றது.]



க்ருஷ்ணுபுரம் அக்ரஹாரத்துக் க்ருஷ்ணன் கோயில்
மஹா கும்பாபிஷேக மண்டலாபிஷேக திநத்தன்று
(5-3-1994) வெளியிடப் பெற்றது.



மார்ச்—1994

இலவச வெளியீடு

# முன்னுரை

**அடியார்களுடன் சில வார்த்தைகள் :**

கலியுகத்தில் இறைவனின் திருநாம முழக்கம் ஒன்றே நமக்குத் துணை நிற்க வல்லது என்பது சான்றோர்களின் வாக்கு. இவ்வழியில் நமக்கு வழிகாட்டி நடத்திச் செல்ல அவ்வப்போது ஆண்டவன் மஹநீயர்களைப் - ப்ரத்யக்ஷ தெய்வங்களாகக் - கண் கண்ட தெய்வங்களாக - அநுக்ரஹிக்கிறான். அவர்களுடைய காலத்தில் நாமும் வாழ்ந்தோம் என்று பெருமைப்பட்டுக் கொள்ளும் அளவில் பல மஹான்கள் தோன்றியுள்ளனர். தவத்திரு ஸாது ராம் ஸ்வாமிகள் நமக்காகவே, நம்மிடையே, நம்முடனே உடனிருந்து வழிகாட்ட வந்த குரு மஹநீயர்!

திருப்புகழ் பரப்பிய வள்ளிமலை ஸ்ரீ ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் ப்ரிய சீடர், திருப்புகழ்ச் சதுரர் அருட்கவி ஸ்ரீ ஸ்வாமிகள் ஸௌலப்யம் என்ற மிக உயர்ந்த பண்புக்கு இலக்கணமாக அனைவருடனும் மிக எளிமையாகப் பழகிக் குறிப்பாகத் திருப்புகழில் நாட்டமுள்ள எவருடனும் ஸல்லாபித்துப் பொருள் விளக்கம் தருவது போன்ற பல உபகாரங்களைச் செய்து வருகிறார். அடியேனின் எளிய முயற்சியில் உருவான திருப்புகழ்த் தொகுப்பான 'ஸ்ரீ வள்ளி கல்யாணம்' பஜநோத்ஸவ நூலைப் பெங்களூரில் ஒரு பகல் முழுதும் பாடச் சொல்லிக் கேட்டு ஆங்காங்கே பிழைகளைத் திருத்திக் கொள்ளவும், தேவைக்கேற்ப மெருகூட்டிக் கொள்ளவும் ஆலோசனைகள் வழங்கி அருளினார்கள். இன்று அந்த நூலைப் பலரும் விரும்பிப் பின்பற்றுகிறார்களென்றால் அது தவத்திரு ஸ்வாமிகளது கருணை கடாக்ஷத்தின் பயனே!

1992ஆம் ஆண்டு கார்த்திகை மாதத்தில் கடையநல்லூர் - க்ருஷ்ணாபுரம் சிவாலயத்தில் ஸர்வசக்தி ஷண்முகன் ஸந்நிதியில் பஜநோத்ஸவ வள்ளி கல்யாணம் நடத்தி வைக்கும் பெரும் வாய்ப்பினை அந்தக் க்ராமத்து அடியார்கள் அடியேனுக்குத் தந்தனர். என்னுடைய பாக்யம், தவத்திரு ஸ்வாமிகள் திருமுன்னர் அதனை

நடத்தும் வாய்ப்பாகவும் அமைந்தது. பஜனை நிகழ்ச்சிகள் முழுதும் உடனிருந்து நாம ஸங்கீர்த்தநம், எல்லோரும் செய்ய வேண்டும் என்று உணர்த்தி எங்களை ஆசீர்வதித்தார்கள்.

அவ்வமயம், அவர்கள், அபய ஹஸ்த்த ஆஞ்ஜநேயர் ஆலயத்தின் ஹநுமானின் பேரில் முப்பத்திரண்டு பாடல்களை அருட்கவிகளாகத் திருவாய்மலர்ந்தருளினர்கள். தமிழகத்தில் ஏராளமான ஆலயங்களில் தவத்திரு ஸ்வாமிகள் அந்தந்த ஆலயத் தெய்வங்கள் மீது அருட்கவிகள் பாடியுள்ளார். இந்த முப்பத்திரண்டு பனுவல்களும் க்ருஷ்ணுபுரம் ஆலயத்து ஆஞ்ஜநேயனின் மஹிமையைக் கூறுகின்றன. இவை அருட்கவிகளாக மலர்ந்து அர்ச்சிக்கப்பட்டபோது உடனிருந்து கேட்ட அடியார்கள் பெரும் புண்யம் செய்தவர்கள் என்பதில் ஐயம் இல்லை.

தவத்திரு ஸ்வாமிகளின் அன்புக்கும், பெருங் கருணைக்கும் பாத்ரமாகும் பல கோடி அடியார்களில் ஒருவனுன எனது வேண்டுகோள் அனைவரும் இந்த நூலைப் பாராயணம் செய்து பயனுற வேண்டும் என்பதே.

இந்தச் சிறிய முன்னுரை மூலம் உங்களுடன் எனது எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ள வாய்ப்பளித்த ஆலயத்து அடியார்களுக்குச் சிரம் தாழ்த்தி, நன்றி கூறுகிறேன். தவத்திரு ஸ்வாமிகளது பெருங் கருணையால் இறைபணியும், நாம ஸங்கீர்த்தந ஸேவையும் உலகில் வேரூன்றிப் பரவும் என்பதில் ஐயம் இல்லை.

குருநாதர் திருவடிகள் துணை

தலைவர்
ஸ்ரீ பாண்டுரங்க பஜனை மண்டலி,
திருவல்லிக்கேணி, சென்னை-5.
9-2-94.

இறைபணித் தொண்டன்,
''குருதாஸன்''
டி. எஸ். க்ருஷ்ண மூர்த்தி

# பதிப்புரை

அன்புடையீர்!

நெல்லை மாவட்டம், தென்காசித் தாலுகா, கடையநல்லூர் அருகில் க்ருஷ்ணபுரம் (கிஷ்கிந்தாபுரம்) க்ராமத்தில் கார்த்திகை மாதத்தில் குமார ஷஷ்ட்டி விழா, பல ஆண்டுகளாகப் பக்தி பூர்வகமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்தக் க்ராமத்தி லுள்ள சிவாலயத்தில் கோயில் கொண்டுள்ள வரப்ரஸாதியான ஸ்ரீ பாலஸுப்ரம்மண்ய ஸ்வாமி ஸந்நிதியின் மஹிமை விளக்கங் களுக்கு அப்பாற்பட்டது.

இதே க்ராமத்தில் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஆஞ்ஜநேயர் ஆலயம் ஒன்றும் அமைந்துள்ளது. ஸ்ரீ ராம பிரானே மந்த்ரங்கள் எழுதி ஸ்ரீ ஹநுமானைப் ப்ரதிஷ்ட்டை செய்ததாகக் கர்ண பரம்பரை வரலாறு உண்டு. பசுமை நிறைந்த வயல்களுக்கு நடுவே உள்ள இந்த ஆலயத்தில் தெற்கு நோக்கிய அபய ஹஸ்த ஜய வீர ஆஞ்ஜநேயர் ஸந்நிதி உள்ளது. ராம தர்சநம் இல்லாமல் இருக்க முடியாது என ஹநுமான் கூறியதால் இங்கு ஸ்ரீ ராமர், ஸீதை, லக்ஷ்மணன், ஹநுமான் காட்சி தரும் மற்றொரு ஸந்நிதியும் உண்டு.

கடந்த 1992ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் ஏழு நாள்கள் குமார ஷஷ்ட்டி உத்ஸவம் மிகச் சிறப்பாக நடந்தது. அவ்வமயம் நடந்த வைபவங்களின் போது, சென்னை-நங்கைநல்லூர்ப் பொங்கி மடாலய அதிபர்-வள்ளிமலை ஸச்சிதாநந்த ஸ்வாமி களின் அருட் சீடர்-திருத் தொண்டர் மாமணி-திருப்புகழ்ச் சதுரர்-அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் முதன் முறையாக வருகை புரிந்து ஏழு நாள்கள் ஸங்கீத உபந்யா ஸங்கள் நடத்தி அருள் மொழிகள் வழங்கி, பக்த்தி வெள்ளத்தில் அனைவரையும் ஆழ்த்தினர். சென்னைத் திருவல்லிக்கேணி ஸ்ரீ பாண்டுரங்க பஜனை மண்டலியார் திருப்புகழ்த் தொகுப்பாக ஸ்ரீ வள்ளி-தேவஸேநா திருமணத்தைப் பஜநோத்ஸவ ஸம்ப்ரதாயப்படி நடத்தினர். தவத்திரு ஸ்வாமிகள் இறைவன் திருவீதி உலாவின் போதும் கலந்துகொண்டு திருப்புகழ் இசை விருந்தளித்தார்.

இந்த வைபவங்களுக்கிடையே, அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 2-12-'92 அன்று ஸ்ரீ ஸ்வாமிகள் க்ருஷ்ணபுரம் ஆஞ்ஜநேயர் ஆலயத்துக்கும் வருகை புரிந்து, ஹநுமான் ஸந்நிதியில் அநுமான் வழிபாட்டுப் பாடல்களான முப்பத்திரண்டு அருட்புகழ்ப் பாக்களை அருட்கவி மலர்களாகச் சாத்தினர். இவற்றைத் தொகுத்துத் தனி வெளியீடாகக் கொண்டுவர எண்ணிய போது தவத்திரு ஸ்வாமிகள் ஆசிகளும், அநுமதியும் வழங்கினர். அவரது பரிபூர்ண ஆசிகளுடன் இந்தத் தொகுப்பு நூல் இன்று வெளிவருகிறது.

அருட்கவி-ஸ்வாமிகள் அருட்புகழ் (1992இல்) பாடிச் சென்ற பின்பு, 26-11-1993இல், இந்த வயற்காட்டு ஆஞ்ஜநேயர் கோயிலுக்கு மஹா கும்பாபிஷேகம் நிகழ்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

வரலாற்றுச் சிறப்பு மிக்க அபய ஹஸ்த ஜய வீர ஹநுமானின் புகழ் கூறும் இந்தப் பதிகங்களை அடியார்கள் அனைவரும் அநுஸந்தாநம் செய்து ஹநுமானின் பேரருளுக்குப் பாத்ரர்களாக வேணடுமென்பது நமது விருப்பம்.

பாமலர்களை அருளி, ஸ்ரீ ஹநுமான் ஆலயத்துக்கும், க்ராமத்துக்கும் பெருமை கூட்டிய தவத்திரு ஸ்வாமிகள் அவர்களுக்கும், இந்நூலை வெளியிடப் பல வகைகளிலும் துணை நின்ற ஸ்வாமிகளுடைய பூர்வாச்ரமத் தமையனர் அருளிசைமணி திருப்புகழ் நல்லிசைச் செல்வர் திரு **S. V. ஸுப்ரம்மண்யன்** அவர்களுக்கும், இந் நூலிற்கு முன்னுரை வழங்கியுள்ள சென்னைத் திருவல்லிக்கேணிப் பாண்டுரங்க பஜனை மண்டலித் தலைவர்-திருவாளர் **T. S. க்ருஷ்ணமூர்த்தி** (குருதாஸன்) அவர்களுக்கும், எங்களது மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஜய! ஸ்ரீ ராமாஞ்ஜநேய!

க்ருஷ்ணபுரம்,
Pin : 627 759.
18 - 2 - 94
(ரதஸப்தமி நன்னாள்)

இறை பணித் தொண்டர்கள்,
ஜய வீர மாருதி ஸேவா ஸமிதி
க்ருஷ்ணபுரம் க்ராம
**ப்ரார்த்தனை ஸங்கம்**

# ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம் – 1

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

ராகம் :— தோடி ] [ தாளம் :— ஆதி

1

பெரிய பெருமாள் திருஅரங்கர்ப்
பேணும் பெரிய திருவடிபோல்
உரிய ராம பிரான்அடியே
உணர்ந்து போற்றும் சிற்றடியே!
பிரிய! சிறிய திருவடியே!
பேச்சில் வல்ல சொற்செல்வா!
அரிய க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (1)

2

கண்ணா ளா!எம் காகுஸ்த்தன்
கருணைக் கடைக்கண் ஏவல்செயும்
திண்ணா ளா!நம் ஜெயவீர
தேவா! தேவர் பதி,மயன்தாழ்
பண்ணா ளா!நா ரதர்பணியும்
பகவா னே!மா ருத்திரனே!
அண்ணா! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (2)

3

கையால் தலைமேல் மிகக்கூப்பிக்
கணமும் மறவா நாமஜபம்
செய்யா நின்றி ராமஎனச்
ஜெபிக்கும் தவத்திற் பெரியோனே!
மையார் கண்ணி ஸீதைபதம்
வணங்கும் விஜய மாருதியாம்
ஐயா! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (3)

## 4

பழகும் அடியார் இடைநடுவே
பயின்று பகவன் நாமம்எலாம்
ஒழுகும் திருவாய் உளத்தாரோ(டு)
உற்றே ராம பஜனைசெயும்
குழகா! குரங்கின் திருமுகமார்
குருவே! திருவே மிகக்கொடுக்கும்
அழகா! **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (4)

## 5

தெளிவார் தெய்வ ஸுயம்பிரபைத்
தீர்த்தக் கரையிற் கோயில்கொண்டாய்!
பொளிவார் வெள்ளைப் பொடிமலிந்த
பூமி அடியார் சூழல்உற்ருய்!
உளியாற் செதுக்காக் குஹைகள்பல
உன்பால் மஹிக்குள் உடையவனே!
அளியார் **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (5)

## 6

தேயம் ஆன பாரதத்தில்
தென்பால் நோக்கித் திருக்கொலுக்கொள்
சேய முகத்துத் தெய்விகனே!
ஸீதை கொழுநர்க்(கு) ஓருதூதா!
தூய ராம பக்தனும்நீ!
ஸுந்த ரப்பேர் வாயுஸுதா!
ஆய **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (6)

## 7

'மூக்த்தா!' என்றே க்ஞாநியரும்
மோநி மாரும் மொழிவர்உனை
வித்தா ரத்தே ஸுந்தரமாய்
விளங்கும் காண்ட நாயகனே!
எத்தால் அன்றே இலங்கிணியை
இலங்கை நகரில் இறக்கவைத்த
அத்தா! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (7)

## 8

ஒருவ னாக இருக்கபிலத்(து)
உறையும் துரையே! ஆள்காட்டி
மருவ(வ்) விரலில் கணையாழி
வைத்த மஹிமை ராமபக்த்தா!
உருவம் ஆகி அஞ்சல்செய்கை
உயர்த்தும் அழகுப் பலபீமா!
அருவ! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (8)

## 9

மூப்பாழ் கடந்தாய்! மார்கழியில்
மூலத் துதித்தாய்! அமாவாஸை
தப்பா நாளில் தாரணிமேல்
தனிஅஞ் ஜனைமா ருதன்ஸுதனாய்
ஒப்பார் இல்லா உருத்திரனாய்
உகாந்தத் தாகும் பிரமன்எனும்
அப்பா! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (9)

## 10

மிடியால் வாடும் வினையோரை
விதியை மாற்றி அளிக்கவல்ல
அடியாய்! பாரி ஜாததரு
அதன்கீழ்த் தவம்செய் அஞ்ஜனைசேய்!
கொடியாய் இருந்து பார்த்தனுக்குக்
கொடிய ஸமரில் உதவிசெய்தாய்!
அடியார் **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (10)

## 11

பெண்மைக் கரசி ஜாநகியாம்
பிராட்டி தந்த சூடாமணி
உண்மைத் தெய்வம் ராகவன்பால்
உகந்து கொண்டு சேர்த்தருள்செய்
கண்மைச் சுரஸை களிப்படக்கும்
காலா! **கடைய நல்லூருக்(கு)**
அண்மைக் **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (11)

## 12

பாடிப் பக்தர் குழுவெல்லாம்
பஜனை செய்துன் ஜயந்தியைக்கொண்
டாடி மகிழும் குளிர்பொழில்கள்
அளிகள் நன்செய் சூழ்கோயில்
தேடிக் கண்டு கொண்டுவந்தாய்!
**தென்கா சிக்குற் றாலம்**அரு(கு)
ஆடிக் **க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)**
**ஆஞ்ஜ நேய!** ஹநுமானே! (12)

## 13

அன்பார் மாதர் ஆடவர்கள்
அம்பார் விழியார் அரம்பையர்கள்
நின்பால் உள்ள நீர்நிலையில்
நியமத் துடனே நீராடித்
துன்பா னவையைத் தொடக்கொழிப்பார்
தொழுவார் அழுவார் எழுவர்பின்னே
அன்பார் க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (13)

## 14

சரண கதவத் ஸலன்நீயே!
சரண கதரட் சகன்நீயே!
கருண கரனும் தாசரதி
காகுஸ்த் தன்மை திலிஇளையோன்
அருள்நா டியவண் ணம்பணிந்தே
அறைக்குள் வடக்கு நோக்கிஉளாய்!
அரணார் க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (14)

## 15

இம்மா நிலத்தில் இறைஞ்சுநர்க்கே
எல்லாப் பேறு பதினாறும்
சும்மாத் தந்தே வரம்அருளும்
ஸுயம்பு வான மாருதியே!
கைம்மா முகனை முதல்வணங்கிக்
கடையில் உன்னை வணங்கு(ம்)மஹி;
அம்மா! க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! (15)

## 16

இருளார் வாழ்க்கை வாழ்வோரை
இஹத்தே பரத்தைப் பெறவைப்பாய்!
மருளார் மகனும் அக்ஷனையே
மாள வைத்தாய்! கதைஉடையாய்!
தெருளார் பீம ஸோதரனே!
செய்யும் பொழிலும் தீர்த்தமும்சூழ்
அருளார் க்ருஷ்ண புரம்வயற்காட்(டு)
ஆஞ்ஜ நேய! ஹநுமானே! *(16)*

(ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம் - 1 முற்றும்)

* * * * * * * *



# ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம் – 2

## (கலி வ்ருத்தம்)

கல்யாணி ] **17** [ ரூபகம்

திருவும்எழில் உருவும்உடை சிவனாகிய வடிவே!
அருவும்உரு அருவும்உரு ஆமாறுள அரசே!
செருவம்துளி இல்லாஇறை! க்ருஷ்ணபுரம் உறைவாய்!
பருவங்களில் விழவும்கொளும் பகவான்ஹநு மானே! (1)

**18**

அற்றார்களுக் கற்றாய்!அடி உற்றார்களுக் குற்றாய்!
பெற்றார்களே மதிக்கும்படிப் பிறவாத்திறத் தடங்கி
உற்றாய்!பகை செற்றாய்!உயர் க்ருஷ்ணபுரம் உறைவாய்!
மற்றார்உனக் கீடிவ்வுல கத்தே?ஹநு மானே! (2)

**19**

மையார்முகம் உடையாய்!மழுப் படையாய்!எனை உடையாய்!
மையார்திரு மேனிப்பர மன்தூதென வந்தாய்!
செய்யார்பொழில் சூழும்பதி க்ருஷ்ணபுரம் திகழ்வாய்!
ஐயா!உனை அடைந்தேன்அடைக் கலமாய்ஹநு மானே! (3)

**20**

பக்தப்பெரு மக்கட்கருள் பரமாம்ப்ரம்ம சாரீ!
சித்தத்தினில் ஸ்ரீராமனை ஜெபம்செய்திற லாளீ!
மத்தக்குழல் க்ருஷ்ணன்வளர் க்ருஷ்ணபுரம் வளர்வாய்!
அத்தத்தினில் கணையாழிகொள் அண்ணா!ஹநு மானே! (4)

**21**

கஞ்சக்கர விசுவேசரும் காண்அங்கயற் கண்ணி
அஞ்சக்கணி அகல்நீள்கணி அக்ராரமில் உறையத்
தஞ்சத்தருள் குலதைவமாய்க் க்ருஷ்ணபுரம் தனிலே
நெஞ்சத்துறை தரல்போல்உனை! நீதான்ஹநு மானே! (5)

## 22

உன்காலினில் வீழ்வார்உகந் தாழ்வார்உரை புகழ்வார்
பின்காமமும் கோபம்பயம் பிறிதேபல வெல்வார்
தென்காசியின் அருகாய்அமர் **க்ருஷ்ணபுரம்** திகழ்வாய்!
நின்காலடி மறவேன்மந நிறைவால்ஹநு மானே! *(6)*

## 23

நறுமாமலை போலேய்திரு மேனிக்குணக் குன்றே!
பெறுமாதவர் பேணிப்பதம் பேசிப்புகழ் பெருமான்
குறுமாமுநி கும்பிட்டெழும் **க்ருஷ்ணபுரம்** குறுகி
உறுமாமுநி! எந்தாய்!உனை உணர்ந்தேன்ஹநு மானே! *(7)*

## 24

சிங்கச்சிலை போலும்மெயில் தலைமேல்உடைச் சிகையாய்!
பிங்கக்கண னே!எம்மிறை! புச்சம்பெரி தானுய்!
வங்கக்கடல் கடந்தாய்!மறைக் **க்ருஷ்ணபுரம்** வாழ்வாய்!
எங்கட்கருள் புரிவாய்!இறை குருவாய்ஹநு மானே! *(8)*

## 25

ஸ்ரீராகவ தூதா!சிவன் அயனுய்உருச் சேர்ந்தாய்!
பாராயண 'ஸ்ரீராமஜ யம்'பன்னிடு வாயாய்!
நாராயணன் பரமன்மகிழ் **க்ருஷ்ணபுரம்** நடுவே
சீராய்அமர்ந் துள்ளாய்!அருள் செய்வாய்!ஹநு மானே! *(9)*

## 26

சநிஆதிய கோள்ஒன்பதும் நாளும்இறை தாஸன்
நினைநேர்படின் நடுங்கும்வினை ஒடுங்கும்இனி நேரா;
தனியேவந்து வயல்சூழ்தரக் **க்ருஷ்ணபுரம்** தனிலே
இனிதாய்அமர் தருவாய்!எமை ஆள்வாய்!ஹநு மானே! *(10)*

## 27

கங்காநதி பாகீரதி மந்தாகிநி கழலே
அங்கார்வமொ டடியேம்தொழ அடிப்பாதல குஹையார்
இங்கார்வமொ டிருந்தாய்!எங்கள் **க்ருஷ்ணபுரத்** திறையே!
மங்காஅருள் ஒளியேதர வருவாய்!ஹநு மானே! (11)

## 28

வலமும்திரு மருவும்செயல் வலியும்தரு மகிழ்வால்
பலமிஞ்சிய பலவான்எனப் பாடும்உனைப் பாடேன்
இலமும்தொழ இருப்பாய்!இவண் **க்ருஷ்ணபுரத்** தீசா!
நலமும்தவ வலியும்தனி நல்காய்!ஹநு மானே! (12)

## 29

தோள்மீதினில் அண்ணன்தொழும் இளவல்தமைத் தூக்கி
ஆள்வான்இலங் கையைப்போர்புரி அரக்கன்முனர்ப் பொருதாய்!
தாள்மீவிழு வார்கள்தொழும் **க்ருஷ்ணபுரம்** தனிலே
ஆள்வாய்!அர சாகிக்குல தேவா!ஹநு மானே! (13)

## 30

ஸஞ்ஜீவியைக் கொணர்ந்தாய்!ஜய வீரா!தகு தீரா!
எஞ்ஜீவரை ஏற்பாய்!இனி தாள்வாய்!இனி மேலும்
ஸஞ்ஜீவி!சி ரஞ்ஜீவி!தண் **க்ருஷ்ணபுரம்** தனிலே
நஞ்ஜீவனுக் குயிராய்உறை நம்பா!ஹநு மானே! (14)

## 31

பல்லூர்களும் பலகோயிலும் படைத்தாய்!உனக் குடைத்தாய்ச்
செல்லூர்தரும் ஆகண்டலன் சிறப்பாய்த்தொழும் கழலாய்!
வல்லூறுகள் இரைதேர்வயல் **க்ருஷ்ணபுரம்** கடைய
**நல்லூர்க்கரு குள்ளாய்**!எங்கள் நாதா!ஹநு மானே! (15)

## 32

அஞ்சற்கரம் காட்டிக்கொடு நின்றாய்!ஹநு மானே!
பஞ்சுக்கரம் பிஞ்சுக்கரம் பாலித்தருள் பரனே!
கஞ்சக்கயல் மீனார்வயல் **க்ருஷ்ணபுரம்** காண்பாய்!
'அஞ்சத்தகு மோ?'என்றஞ்சல் அளிப்பாய்!ஹநு மானே! (16)

### (ஹநுமான் அருட்புகழ்ப் பதிகம் - 2 முற்றும்)

[கடைய நல்லூர்க் க்ருஷ்ணபுரம் வயற்காட்டு ஆஞ்ஜநேயர் அருட்புகழ் இனிது நிறைவுறும்]

—o—





இந்நூல் ஆசிரியர் :

அருட்கவி - தவத்திரு

**ஸாது ராம் ஸ்வாமிகள்**

---

## இந் நூல்

## கிடைக்கும் இடங்கள்

1) அருள் இசைமணி ப்ரஹ்மஸ்ரீ ஸ்ரீ ஸு. வே. ஸுப்ரம்மண்யன்,
ஸ்ரீ பொங்கி மடாலயம், மனை-22,
பொங்கி மடாலயம் தெரு, நங்கை நல்லூர்,
சென்னை-600 061.

2) ப்ரஹ்ம்மஸ்ரீ D. அநந்த ஸுப்ரம்மண்யன்,
'ஆண்டவன் அருள்'
B 2/26, கண்ணகி தெரு, கொரட்டூர், சென்னை-600 080.

3) ப்ரஹ்ம்மஸ்ரீ K. P. ராமன் (ராஜு),
58, பெருமாள் கோயில் ஸந்நிதித் தெரு,
க்ருஷ்ணபுரம் அஞ்சல், கடைய நல்லூர் (வழி)
(நெல்லை மாவட்டம்), 627 759.